[28th April 1960

THE HON. SRI C. SUBRAMANIAM: பல கட்சித் தலைவர்கள் அங்கு போகிறார்கள். அப்படி தலைவர்கள் போவதில் அரசாங்கத்திற்கு எவ்விதமான ஆட்சேபனையும் கிடையாது. தலைவர்கள் அங்கு போகும்போது பொறுப்பாக பேசுகிறார்கள் என்பதை நானும் உணர்கிறேன். இதிலுள்ள முக்கிய கஷ்டம், மாணவர் மன்றங்கள் சிலவற்றில் கட்சிசார்பில் சில பேர்கள் நிறுத்தி வைக்கப்பட்டு அதில் அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்களும் வேலை செய்கிறார்கள் என்ற தகவல் சர்க்காருக்கு வந்திருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM: "ஆன் எ பாயிண்ட் ஆப் பெர்ஸனல் எக்ஸ்ப்ளனேஷன்". அமைச்சர் அவர்கள் ஒரு அகில இந்தியக் கட்சி இதை ஒத்துக்கொள்ளவில்லை என்று சொன்னார்கள். கம்யூனிஸ்ட் கட்சிதான் அதை ஒத்துக்கொள்ளவில்லை என்பதை இந்த சபையின் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். அவர் பதில் சொல்லும்போது, கம்யூனிஸ்ட் கட்சியினர், இம்மாநிலத்தில் இருக்கிறவர்கள் ஒரு அபிப்பிராயம் வைத்திருப்பதாகவும், கேரளாவில் அவர்கள் அதை ஒத்துக் கொள்ள இயலவில்லை என்றும் அர்த்தம் வருவதுபோல் சொன்னார்கள். கம்யூனிஸ்ட் கட்சிக்குள் நடக்கும் விவாதங்களை இவ்வளவு நுட்பமாக கவனித்து சொல்லியிருந்தாலும் அது தவறு என்பதை இங்கு சொல்ல விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: நான் கவனித்து சொல்லவில்லை. அங்கத்தினரிடமிருந்து தெரிந்துதான் சொன்னேன்.

MR. SPEAKER: I would like to tell hon. Member one thing. In putting supplementaries, the hon. Member who puts the main question generally has preference and can put two or three supplementaries. Then I give chance to others. If new members want to put supplementaries, I allow them also. But what I deprecate is the attempt on the part of individual members to monop lise the Question Hour. I regret, therefore, I cannot allow them all to ask questions. I am the final authority to decide whether enough number of supplementaries have been put on any particular question. If hon. Members go on raising their hands, I am afraid I cannot call all of them. I do not want individual members to monopolise the Question Hour.

*Women's Education*

*856 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா?

(அ) பெண்கள் கல்வியை விஸ்தரிக்கவும், அபிவிருத்தி செய்யவும், ஆலோசனை தெரிவிப்பதற்காகவும், கொள்கைகள், திட்டங்கள் வகுப்பதற்காகவும், சென்னை ராஜ்யத்தில் பெண்கள் அடங்கிய தேசியக் கவுன்சில் ஒன்றை நிறுவுவது பற்றி அரசாங்கத்தாரால் பரிசீலனை ஏதாவது நடத்தப்பட்டு வருகிறதா?

(ஆ) அவ்வாறு பரிசீலனை ஏதாவது நடத்தப்பட்டுவரின் விவரங்கள் யாவை?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) Yes, Sir.

(ஆ) The proposal is still under examination.

28th April 1960]

SRI P. G. MANICKAM : அவ்வாறு தேசிய கவுன்ஸில் அமைக்கப்படுமானல், இதில் எல்லா ஜில்லாக்களின் பிரதிநிதிகளே யும் உட்படுவதற்கு அரசாங்கம் முயற்சி செய்யுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : கவுன்ஸில் நிறுவுவதைப் பற்றி இன்னும் முடிவு செய்யப்படவில்லே. முடிவு செய்து பின்னல் இதைப்பற்றி பரிசீலிக்கலாம்.

* 857 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப் பாரா—

(அ) மாதர் கல்வி முன்னேற்றத்திற்கு மத்திய அரசாங்கம் விசேஷ சலுகை காட்டுகிறதா?

(ஆ) அதன் விபரமென்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) Yes, Sir.

(ஆ) Under the Centrally Sponsored Scheme for expansion of Girls' Education and Training of Women Teachers, the Government of India give grants towards 75 per cent of the total expenditure that might be incurred by the State Government on the following items:—

1. Provision of free accommodation for women teachers in rural areas.

2. Appointment of School Mothers in rural areas.

3. Organization of condensed and special courses combining general education and teacher training for adult women.

4. Stipends for women teacher trainees.

5. Organization of refresher course for trained women.

6. Stipends for girl students of classes VIII to XI to cover tuition and other fees, books and stationery.

The total Central grant available every year is fixed beforehand.

SRI A. VEDARATHNAM : மத்திய அரசாங்கத்தின் இந்த மான்யத்தை பயன்படுத்திக்கொள்வதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்திருக்கிறது. அமைச்சர் அவர்கள் படித்த பட்டியலில் எந்தெந்த இனத்தில் எவ்வளவு எவ்வளவு நாம் பயன் படுத்தியிருக்கிறோம். அதற்கு என்ன திட்டங்கள் இருக்கின்றன?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி நான் நேற்று விரிவாகச் சொன்னேன். இவர்களுக்கு 252 வீடுகள் கட்டி கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. Appointment of school mothers என்கிற திட்டத்தை நாம் இன்னும் எடுத்துக்கொள்ளவில்லே . . . . . .

Organization of combined and special courses combining general education and teacher training for adult women

இதை சில ஸ்தாபனங்களில் மட்டும் நடத்திக்கொண்டி ருக்கிறார்கள், அதற்கு நாம் உதவி செய்து வருகிறோம் . . . . . Stipends for women teachers என்பதில் இப்போதும்